*Muracoli*

*Muracu 1, oli 8*

*May 21, 1954*

Record no. 945

மு.கருணாநிதி

முரசு 1 | சென்னை | 21 — 5 — 54 | வெள்ளி | ஒலி 8

# மதுவிலக்கு மாத்திரைகள்!

புற்றுப் பாம்பைப் பார்த்து "சற்றே விலகி இரு" என்று கண்டிப்பான உத்தரவு போடக் கூடிய காளைப் பருவம்—பொற் கோட்டு இமயமோ அன்றி பொதிகையோ என்று ஐயுறும்படி அமைந்த தினவெடுக்கும் தோள்கள்—ஈட்டியின் முனையும் வாளின் கூர்மையும் வணங்கிப் பணியும் பளிங்குக் கண்களின் காந்தப் பார்வை—இப்படி கண்டவர் வருணிக்கும் வாலிபன் அவன்! அழகான மல்லிகை அழுகல் நாற்றத்தை மறைக்க பயன்படுவதைப் போல அவன் வாலிபம் விழலுக்கு இறைக்கப்பட்டது. கூத்தியாள் வீட்டிலே எந்நேரமும் கும்மாளம் போட்டான், அவன்! "விபச்சாரகன்!" — என்று கடிந்து உரைத்தனர் பலர்! "பொல்லாத வயது!" என்று பரிந்து பேசினர், சிலர்!

எப்படியோ இளைஞன் கெட்டு விட்டான்! வெள்ளிப்பணத்தை ஓட்டாஞ்சல்லியாக வாரிக் கொடுத்தான்—இன்ப போதைக்காக! பொன்னணி பூண்டிருந்த தாய் வெறுங்கழுத்தோடு நின்றாள்; எல்லாம் 'அவள்' வீட்டில் குடியேறியது; இந்தக் கொடுமையை ஒழிக்க என்ன செய்வது?" என்ற கேள்வி நல்லவர் இதயந்தோறும் எழுந்தது. உற்றார் உறவினர்; மற்றும் ஊரிலுள்ள பெரியவர்களெல்லாம் அந்த வாலிபனின் சேஷ்டைக்கு தக்கதொரு மருந்து காண முற்போக்கு மன்றத்திலே கூடினர். நீண்ட விவாதத்திற்குப் பிறகு, பெருங்குணம் படைத்த ஒரு புத்திசாலியான மனைவிதான் அவன் லீலைகளுக்கு மாற்று—என்ற முடிவுக்கு வந்தனர். விரைவிலே அருங்குணவதியென்று பலரால் நம்பப்பட்ட ஒரு பெண்ணைக் கொணர்ந்து அவளுக்கும், வாலிபனுக்கும் நல்லநாள் ஒன்று குறித்து தாலி கட்டினார்கள்.

நாட்கள் பல உருண்டன... வாலிபனின் விளையாட்டுகள் ஓயவில்லை; மாறாக புதிய பிரச்சினையொன்று எழுந்தது! கணவனைக் கட்டுப்படுத்த வேண்டிய குணசுந்தரி தணியாத தன் காமவெறியைக் கட்டவிழ்த்துவிட்டாள்—வல்லவர் பலருக்கு கள்ளக்காதலியானாள்! கொதித்துப் போனார்கள் மன்றத்துமக்கள்! கிராமத்து சட்டங்களை கடுமையாக்கினர். கூடத்துத் தூணிலே அவளைக் கட்டிப் போட்டனர்." "என் உடலைத்தானே கட்ட முடிந்தது உங்களால்; இதோ பாருங்கள் பலகணி வழியே பாயும் என் கண்ணின் பாணம்!' என்று கூறி சிரித்தாள், அவள்! பார்த்தார்கள் ஊரார்: வாலிபனை அருகே அழைத்து "செல்வத் திருமகனே! நீ வேசி வலையிலிருந்து மீளுவாய் என்றுதான் இந்தச் சிறுக்கிக்கு உன்னை மணம் முடித்தோம்! இவளோ துர்நடத்தையில் அந்த வேசியையும் மிஞ்சிவிட்டாள். இந்தமாபெரும் குற்றம் செய்த எங்களை மன்னித்துவிடு: உடனே இவளை விவாகரத்து செய்துவிடு' என்று கண்ணீர் மல்கி, கெஞ்சிக் கேட்டுக் கொண்டனர்.

இப்படி கதையிலேவரும் வாலிப விபச்சாரகனுக்கு சற்றேனும் குறைந்தவர்களல்ல, இந்த மாநிலத்து குடிகாரர்கள்—சொந்த நாட்டில் செல்வம் கொழிக்கச்செய்யவேண்டிய குடியானவர்கள் கள்ளுக்கடையிலே உழைப்பால் வந்த ஊதியத்தை ஊதி விட்டார்கள்! அப்பப்பா அந்த குடியால் வந்த கேடுகள் தான் எத்தனை! தாலிக்கயிறைக் கூட ஏலத்தில் விட்டு போதை பருகினர், பலர்! அந்த வாலிபனைக் கெடுத்த வேசியின் போதைக்கு இந்த மதுவின் போதை சற்றேனும் குறைந்ததல்ல! எனவேதான் ஊர்ப்பெருமக்கள்—முற்போக்கு எண்ணங்கொண்ட பலதிறப்பட்டகட்சிக்காரர்கள் "மதுவிலக்கு" என்னும் [illegible]யை அவனுக்கு [illegible] மணமுடித்தனர்— குடிகாரர்கள் திருந்துவார்கள் என்ற பெருநோக்கோடு!—இப்படி எதிர் பார்த்தவர்கள் ஏமாந்தார்கள்! மதுவிலக்கு—கோரப் பற்களோடு காட்சிதரும் கொடுமைகளுக்கு விலக்களிக்கும்—மதுக் குடத்திலே சொர்க்க புரியைக் காணும் சோம்பேறி மனதிற்கு விடுதலை வழங்கும் என்று எதிர் பார்த்தவர்கள் ஏமாந்தார்கள்! இல்லறம் நடாத்த மனை புகுந்தவள்—உடற்பசி ஆற்ற கட்டிலறை அமைத்த கதையாக மதுவிலக்கின் கதை முடிந்தது.

மதுவிலக்கு இலாக்கா தரும் புள்ளி விபரங்களைப் பாருங்கள். சென்னை மாநகரில் மட்டும் மதுவிலக்குக் குற்றங்கள பத்து மடங்கு பெருகியுள்ளன. அதாவது 1949–50ல் அறுநூற்றி நாற்பதாக இருந்தது 1952–53ல் ஆறுயிரத்து ஐம்பதாகவும் மாகாண முழுவதிலும் மதுவிலக்கு குற்றங்கள் 30 ஆயிரமாக இருந்து 79 ஆயிரங்களாகவும் பெருகியிருக்கின்றன, வாலிபனை அடக்க வந்த மனைவியின் லீலா விநோதங்கள் வளர்ந்ததைப் போல! நாட்டிலே எங்கும் சாராயக்கடை இல்லை; ஆனால் சாராயம் எங்கும் சாதாரணமாகக் கிடைக்கிறது. அந்த'ரிப்போர்ட்' ஒப்புக்கொள்கிறபடி கிராமாந்திரங்களிலிருந்து ஏராளமான கள்ளச்சாராயம் பட்டணங்களுக்கு பட்டுவாடா செய்யப்படுகின்றதாம்! அந்தந்த ஊரிலே உள்ள செல்வாக்கு படைத்த சில பெரிய மனிதர்கள் ரகசியமாக பொருளுதவி செய்வதால் தான் இந்தக் குற்றவாளிகள் தப்பிவிடுகிறார்களாம்! மதுவிலக்கை உடைத்தெரியும் அந்த பெரிய மனிதர்கள் அனைவரும் பிடிபட்டார்கள் இல்லை; இவ்வாறு அமைந்திருக்கிறது போலீஸ் இலாகாவின் திறமை!

குற்ற மொன்றிற்காக குறைந்தது 3-பேர் கைது செய்யப்பட்டாலும் 79-ஆயிரம் குற்றங்களின் காரணமாக கைதானவர்கள் தொகை இரண்டு லட்சத்தையும் மீறுகிறது. உதாரணமாக திருச்சி மத்யசிறையின் கால் பகுதியை நிரந்தர வாசஸ்தல

5-ம் பக்கம் பார்க்க

## இவரைப் பற்றி....



பேனா ஓவியம்

7-ம் பக்கம்

# வேட்டைக்காடா-வசந்த மாளிகையா?

பவனி வரப்போகிறாராம்! மனைவியின் துணையோடு, சுற்றத்தார் பலரோடு தென்னாடு முழுதும் சுற்றுப் பயணம் செய்யப் போகிறாராம். தென்கோடி இராமேசுவரமும், இன்னபிற திருத்தலங்களும் அவர்களின் நிகழ்ச்சி நிரலில்இடம் பெற்றுள்ளனவாம். அவர்கள் சுற்றுப் பயணம் செய்யப் போவது ஒரு நாளல்ல, ஒரு வாரமல்ல—இரண்டு மாதங்களாம்—ஜூன், ஜூலை மாதங்கள் முழுதும் அவர்களின் சுற்றுப்பயணம் நடைபெறுமாம். இவை அனைத்துக்கும் ஆன செலவை சென்னை சர்க்காரே ஏற்றுக் கொள்ளப் போகிறதாம் பேசிக் கொள்ளப்படுகிறது சர்க்கார் மாளிகையில்!

தென்னாடு சுற்றிப்பார்க்க வடநாட்டிலிருந்து வருபவர்களை நாம் தடுக்கவில்லை. அது அரசியல் அநாகரிகம் என்பதையும் நாமறிவோம். ஆனால் வருகிற அந்த 'பிரபு'க்கள் ஏன் வருகிறார்கள்? துணைவியைஅழைத்துக் கொண்டு வருகிறாராமே, பந்துக்களும், பரிவாரங்களும் வேறு வருகின்றனராமே—இது பற்றி சிந்திக்க வேண்டாமா? அப்படி நினைக்காதிருக்க நாமென்ன கவலையற்றவர்களா?

இந்திய அரசாங்கத்தின் நிதி மந்திரி சிந்தாமணி தேஷ்முக், அவர், தன் மனைவி துர்காபாய் தேஷ் முக்கையும், மற்றும் ஆள் அம்பு, பரிவாரங்களையும் கூட்டிக் கொண்டு, ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் தென்னாட்டில் நடைபெற்றுவரும் சமூக நல திட்டங்களைப் பார்வையிட ஜூன் மாதத்தில் வரப்போவதாகச் சொல்லப்படுகிறது. இரண்டு மாதங்கள் சுற்றித்திரிந்துவிட்டு திரும்பப் போகிறாராம்.

சிந்தாமணி தேஷ்முக் மீது நமக்கு தனிப்பட்ட விரோதமில்லை—இன்னும் சொன்னால் அவர் காங்கிரசல்லாதவர்-ஆனால் அவர்ஏன்சர்க்கார்பணத்தைவிரயமாக்க வேண்டும் என்பதே நம் வினா! இராமபிரான் தரிசனத்திற்கும் கள்ளழகர் கடாட்சத்திற்கும் சர்க்கார் பணத்தைத் தானா வாரி இறைக்க வேண்டும்? சமூக நலத் திட்டங்கள் எப்படி நடை பெறுகிறது என்று பார்வை யிடவருகிறாராம்—மனைவியோடு—மற்றும் பலரோடு! நமக்குத் தெரியாதா சிந்தாமணியாரின் சிங்காரப்பவனி ஏன், அதற்கு திட்டங்கள் காரணங்களாகக் காட்டப்படுவதேன்" என்று.

ஜர்மன் நாட்டு ஜாலக்காரி மாடம் நிசாயின் மர்மவிளையாட்டுக்களைப் படித்தறிந்தவர்கள் நாம்- ஜீலம்நதிக்கரைப் போரிலே சிரம் தாழ்த்திய புருஷோத்தமன் அலெக்சாண்டரை கவிழ்த்த சூதை நாமறிவோம்—என்றாலும் டில்லி பீடம் 'கல் ஒன்று கனி இரண்டு' என்று கபட சூத்திரத்தை நம்மிடம் விரிக்கிறது. தேவாலயங்களையும் தரிசிக்க வேண்டும், தேவையான செலவையும் சென்னை சர்க்காரேசெலவிட வேண்டும். இதற்கு ஆசை வார்த்தை 'திட்டங்களின் நடைமுறை வேலைகளைப் பார்க்கப் போகிறேன்' என்பதாகும்.

திட்டங்களைப் பார்க்க வருகிறாரே தேஷ்முக், அப்படியென்ன திட்டங்களைத் தீட்டித் தந்துவிட்டார்கள் தென்னாட்டிற்கு! ஒன்பது மாநிலங்களின் மொத்த வருமானத்தில் ஐந்தில் ஒரு பங்கை தலைமை பீடத்திற்கு அளந்து கொடுக்கும் சென்னைக்கு—தென்னகத்திற்கு ஐந்தாண்டுத் திட்டத்தில் என்ன சாதகம் செய்துவிட்டார்கள் அவர்கள்? அதிகமான தொகை அள்ளித் தருகிறதே சென்னை என்று எண்ணியாவது சென்னைமீது கடைக்கண்ணைச் செலுத்தியதுண்டா அந்தக் காருண்ய புருஷர்கள்! குப்புறக் கவிழ்த்தது மல்லாடில், குதிரை குழியையும் தோண்டினால் யாருக்குத்தான் ஆத்திரம் வராது? கண்மூடி மவுனியின் உள்ளங்கூட புண்பட்டு புழுவாகத் துடிக்குமே! பவனி வருகிறாராம்—திட்டங்களைப்பார்க்க! ஏன் வருகிறார், யார் அழைத்தார்கள்? வளங்கொழிக்கும் திட்டங்களை வட நாட்டில் வைத்துக் கொண்டு, வையகம் தூற்றுமே என்பதற்காக இரண்டொரு திட்டங்களை சென்னைக்கு ஒதுக்கியிருக்கிறார்கள் இந்த பாரதபுத்திரர்கள் — அதைப் பார்வையிட ஒரு "டம்பாச்சாரி" கும்பலாம் அதுவும் இரண்டுமாத சுற்றுப் பயணமாம் — அந்தச் செலவை சென்னை சர்க்கார் ஏற்றுக் கொள்ளவேண்டுமாம்.

ஐந்தாண்டுத் திட்டம் குடும்பத்தின் நல்வாழ்வுக்கான திட்டம் என்கிறார்கள்—அப்படியே வைத்துக் கொண்டாலும் குடும்பத்தின் திட்டத்தை பார்வையிட செலவாகும் தொகையை குடும்பம் பொதுப் பணத்தில்தானே செலவு செய்யவேண்டும் —அதுதானே நல்ல குடும்பத்திற்கு அழகு! புதல்வர்களின் சம்பாத்தியத்தையும் வாங்கி வாயில் போட்டுக் கொண்டு, சிந்தாமணியாரின் சுற்றுப் பயணத்திற்கும் புதல்வனே செலவு செய்ய வேண்டுமென்றால், எந்தப்புதல்வன் தான் இக்கொடுமையை சகித்துக் கொள்வான்? எந்தப் புதல்வன் இந்தக் குடும்பத்தில் ஒத்து வாழ நினைப்பான்? அப்பாவி, அதட்டிப்பேச திறனில்லாத வாயில்லா பூச்சி, அங்க ஹீனன்—இவர்களால்கூட பொறுத்துக் கொள்ள முடியாத கல்நெஞ்சர்கள் செயலாயிற்றே இது! நிலைமையை இவ்வாறுவளர்த்துக் கொண்டு, பண்டிதர் இரண்டு தினங்களுக்கு முன்பு பேசியிருக்கிறார் "தென்னாட்டாரை வடநாட்டார்குறைகூறக்கூடாது; தென்னாட்டாரை, தென்னாட்டாரே கண்டித்துக்கொள்ளட்டும்" என்று. வட நாட்டார் தென்னாட்டாரை குறைகூற வேண்டாம், தென்னாட்டாரே தென்னாட்டினரை கண்டிக்கும் சூழ்நிலையை நாம் உருவாக்கினால் போதும் என்ற பொருளில் பண்டிதர் பேசினாரோ என்னவோ! சிந்தாமணியாரை அனுப்புவோம்—வீண்விரயமென்று எதிர்கட்சிக்காரர்கள் கத்துவார்கள்—காங்கிரஸ்காரர்கள் அதைக் கண்டிப்பார்கள்-ஆனால் வடநாட்டார் இதில் தலையிடவேண்டாம்—என்ற எண்ணத்தில் தேஷ்முக்கின் 'திருப்பவனி' ஏற்பாடாகி இருந்தாலும், விலகிக் கொள்ளப் போவதாக 'புஷ்வானம்' விட்ட சிந்தாமணியாருக்கு நேருதந்த 'சான்ஸ்' தான் இந்தப் பவனி என்றாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. காரணம் 'தென்னாடுவடநாட்டின் வேட்டைக்காடு— வந்தவர்களுக்கெல்லாம் வாழ்வுதரும் வசந்த மாளிகை'—என்பது அவர்கள் முடிவு.

—தேன்னரசு

## கருணாநிதி நிகழ்ச்சிகள்

| | |
|---|---|
| மே—27 | ஆலந்தூர் (சென்னை) |
| 28 | நுங்கம்பாக்கம் |
| 29 | பரமக்குடி |
| 30 | பீமநகர் |

ஜூன் 1—முதல் 7 முடிய தஞ்சை மாவட்டம்.

11, 12, 13 நாஞ்சில் மாவட்டம்.

## மு. கருணாநிதி—முக்கிய அறிவிப்பு

அன்புத் தோழர்கட்கு—

வரும் ஜூன்மாதம் 15ம் நாள் வரையிலே சுற்றுப்பயணத் திட்டம் வகுத்து பல இடங்களில் பேசிட ஒத்துக் கொண்டுள்ளேன். இதற்கிடையே கூட்டங்களில் பேசிடும் போது திடீரெனத் தொண்டையிலே வலி ஏற்படுவதும், குரல் கம்மி விடுவதுமான பல தொந்திரவுக்கு ஆளாகி விடுவதை முன்னிட்டும், 15-5-54 சோழவந்தான் கூட்டத்தின் மறுநாள் முதல் தொண்டை வலி அதிகமாகவும் ஆகிவிட்ட படியாலும் மதுரையிலேயுள்ள நமது டாக்டர் அருணாசலம் பி. ஏ., எம். பி. பி. எஸ். அவர்களின் உதவியுடன் இ. என். டி. ஸ்பெஷலிஸ்ட் ஆக உள்ள சிறந்த வைத்திய நிபுணரான டாக்டர் கே. எஸ். நாராயணன் அவர்களிடம் சிகிச்சை பெறச் சென்று—அவரது நீண்ட நேர பரிசோதனைக்குப் பிறகு, அவர் கடுமையான நிபந்தனை விதித்துவிட்டார். கோவை டாக்டர் பழனியப்பன் என்ற ஈ. என். டீ. ஸ்பெஷலிஸ்ட் அவர்களும் இதே அபிப்பிராயத்தையே வெளியிட்டார். எனது தொண்டைப் பாகத்திலேயுள்ள 'ரீட்ஸ்'கள் பலவீனமானவை யென்றும், பத்து வருடங்களாக ஓயாது பேசி வருவதால் அந்தப் பலவீனமான பாகங்கள் வளைந்து கொடுக்கும் தன்மையை இழந்துவிட்டன என்றும் அது சரிப்பட வேண்டுமானால், ஆறு மாத காலம் யாருடனும் பேசாமல் மௌனமாகவே இருக்க வேண்டுமென்றும், இந்த நிபந்தனையை மீறி தொடர்ந்து முன் போல் பேசிக் கொண்டிருந்தால் விரைவில் குரலையே—அதாவது பேசும் சக்தியையே இழந்துவிட வேண்டுமென்றும் கடுமையாக எச்சரிக்கை செயதுள்ளார், மதுரை டாக்டர் திரு. நாராயணன் அவர்கள். ஆகவே, ஆறு மாத காலம் எந்தக் கூட்டங்களிலும் நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ள முடியாத நிலைமை ஏற்பட்டதை தாங்காத வேதனையுடன் தமிழகத்திற்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்போது ஒத்துக்கொண்டுள்ள சுற்றுப் பயணத் திட்டம் இதன் காரணமாக ரத்து செய்யப்படவில்லை. இந்த சுற்றுப் பயணத்தை கூடியவரையில் கஷ்டப்பட்டு முடித்துவிட்டு, ஜூன் மாதம் 15ந் தேதி முதல் மிகவும் சங்கடத்தோடு டாக்டர்களின் யோசனைப்படி நடந்திட வேண்டியவனாக யிருக்கிறேன். வீட்டிலும், நண்பர்களிடமும் கூட பேசக் கூடாது எனும் கடுமையான யோசனையை ஏற்றுக்கொள்ள வேண்டிய நிலைமைக்கு ஆளாகிவிட்டேன் என்றாலும், அந்த நிலைமையையும் கடமை செய்யச் சாதகமாக்கிக் கொள்வேன்; அந்த ஆறு மாதமும் 'முரசொலி'யின் மூலம் வாரந்தோறும் அனைவரையும் சந்திப்பேன் என்ற ஆறுதலும் பெறுகிறேன்—தோழர்கள் என்னை மன்னித்திட வேண்டுகிறேன்.

அன்புள்ள,

**மு. கருணாநிதி**

# தலையங்கம்

சென்னை (21—5—54) வெள்ளி

# நம் நாடு-நமது ஏடு

தினத்தாள் ஒன்று இல்லாவிட்டால் தி. மு. கழகத்தின் வளர்ச்சி தேய்ந்துவிடாது என்றாலும்—கழகத் தோழர்களின் உழைப்பு ஓய்ந்து விடாது என்றாலும்—கழகத்தைப் பற்றிய செய்திகளையும்...நிகழ்ச்சிகளையும்—இருட்டறைக்குள் வைரமென ஆக்கிவிடுவது அவ்வளவு நல்லதல்ல என்ற முடிவால் உந்தப்பட்ட கழகத் தோழர்கள் அனைவரும்—கடிதங்கள் மூலமும், கழகக் கிளைகளின் தீர்மானங்கள் மூலமும் பொதுக் குழுவில் யோசனை கூறுவதின் மூலமும்-தலைமைக் கழகத்தை-தினத்தாள் நடத்தும் பொறுப்புக்கு கொண்டுவந்து விட்டார்கள். தினத்தாளின் தேவையை முன்னமேயே உணர்ந்திருந்து, ஆனால் சூழ்நிலைகளுக்காகக் காத்திருந்த தலைமை நிலயம், 'நம்நாடு' இதழை சென்ற ஆண்டு ஜூன் மாதம் 15-ம் நாள் துவக்கியது. பொதுச் செயலாளர் அறிஞர் அண்ணா அவர்களே பத்திரிகையின் ஆசிரியர் பொறுப்பை ஏற்றுக் கொண்டார்கள். அருமைப் பொன்னம்பலனார் அவர்களின் நிர்வாகத் திறமையிலும் இணையாசிரியர் தோழர் காஞ்சி கலியாணசுந்தரனார் அவர்களின் எழுத்துப்பணியிலும், இயக்கத் தோழர்கள் காட்டிடும் ஆர்வத்திலும் நமது 'நம்நாடு' தமிழகத்திலே நல்லதோர் இடத்தை பெற்றுவிட்டது என்றாலும்-ஏடு, இன்னும் சிறப்பான முறையிலும்-பெரிய அளவிலும்-உலகச் செய்திகள் தாங்கிவரும் நிலையிலும்—வெளிவரவேண்டுமேன்பது எல்லோரின் ஆசையாக உருவெடுத்து நிற்கிறது என்பதை மறுக்க முடியாது. ஏடு துவங்கிய நேரம், தி. மு. கழகம் களத்திலே அடியெடுத்து வைத்த நேரம். அந்தச் சமயத்தில் நமது தினத்தாள் துவங்கியிராமலிருந்திருந்தால்—நமது களம் புகு காதையைப் பற்றி கங்காணி ஏடுகள் எத்தனை யெத்தனைக் கற்பனைக் கதைகளை கொட்டியிருக்குமோ நாமறியோம். அத்தகைய அத்யாவசியமான வேளையிலே ஆரம்பிக்கப்பட்ட 'நம்நாடு' நமது வீட்டுப்பிள்ளை என்று சுட்டிக் காட்டப்பட்டது அப்பொழுதே!

இதழ் வெளிவந்த அடுத்த திங்களே அண்ணா அவர்களும் மற்றவர்களும் சிறை சென்றிட நேரிட்டது. கழகம் பல நெருக்கடிகளை சமாளிக்கத் தன்னைத் தயார் படுத்திக்கொண்டது. "நாங்கள் உள்ளே இருக்கிறோம்—'நம்நாடு' நமது குழந்தை-அதைச் சீராட்டிப் பாராட்டி செழிப்பாக வளருங்கள்" என்ற கருத்துள்ள வாசகங்களை நாட்டு மக்களிடமும்—கழகச் செயல் வீரர்களிடமும் எதிர்வைத்தார், பொதுச் செயலாளர்.

குறுநகை புரிந்தும், சிறுகை நீட்டியும், கொஞ்சிப் பேசியும்—தளிர் நடை போட்ட தமிழ்த் தென்றலாம், 'நம்நாடு' எனும் குழந்தை கழகத் தோழர்களின் பராமரிப்பிலே பத்திரமாகப் பாதுகாக்கப்படுகிறது என்றாலும் அழுத பிறகு வாழைப் பழம் பெறுகிற குழந்தையின் நிலைமைக்கு அடிக்கடி ஆளாகிறது; குழந்தையின் தேவையறிந்து அதைக் கொண்டாடிடும் பண்பு சில நேரங்களில்—சில பலரால்—கைவிடவும்படுகிறது. இந்தச் சிக்கல் நிறைந்த செய்தியைத்தான் 'நம்நாடு' இதழ்—தனது தலையங்கத்தின் மூலமும் நாட்டுக்கு எடுத்துச் சொல்லியிருக்கிறது. விற்பனையாளர்கள் தங்கள் வசதிக் குறைவுகளைக் காரணம் காட்டி மாதாந்திரப்பட்டியல் பணத்தை பாக்கிவைத்து விடுகிறார்கள் என்ற வருத்தத்தையும் இவர்களது பட்டியல் பணத்தை ஏமாற்றிவிட்டேன் என்று இறுமாப்பு மொழி பகரும் நாணயங்கெட்ட ஒரு சில நாசகாரர்களின் போலிவேடத்தை விரைவில் அம்பலமாக்குவோம் என்ற எச்சரிக்கையையும், 'நம்நாடு' இதழ் தனது தலையங்கத்தின் மூலம் சொல்லும்போது உண்மையாகவே, வேதனை வெள்ளம் பெருக்கெடுக்கிறது நமக்கு.

நூற்றுக்கு மூன்றுபேர் கொண்ட உறிஞ்சும் சமுதாயத்தினர், உதவாக்கரை இதழ்கள் பலவற்றை-மாதாந்திரம் வாராந்திரம் என்றஅளவிலும் இன்னும் பெரும் பெரும் தினசரி இதழ்களும் நடத்திக்கொண்டு வளருகிறார்கள்-நம்மையும் நசுக்கிக் கொண்டே-என்பதையும், பெரியதோர் சமுதாயப் பெருங்குடி மக்களாகிய நாம் ஒன்றிரண்டு வார ஏடுகளும், ஒரே ஒரு தினசரி இதழும் நல்ல முறையில் நடத்திட நமது தோழர்கள் வாய்ப்பு அளிப்பதில்லை-அப்படி வாய்ப்பு ஏற்படுத்திக் கொண்டாலும், அதைத் தாங்கள் அனுஷ்டிக்கும் அலட்சியப் போக்கால் அழித்திடுகிறார்கள், தங்களையறியாமலேயே என்பதையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது யாருக்குத்தான் சோகப் பெருஞ்சுமை இதயத்தில் விழாமற்போய்விடும் என்று கேட்கிறோம்.

ஆயிரத்திற்கு மேற்பட்ட கிளைகள் இருக்கின்றன. முன்னணி வீரர்கள் பலரை வைத்து கூட்டம் நடத்தும் ஆசையும் அவர்களுக்கு அமோகமாக இருக்கிறது. நடத்திடவும் செய்கிறார்கள். நடத்திடவும் முடிகிறது. பிரச்சாரகர்களுக்குத்தான் எல்லாக்கிளையினரையும் திருப்தி செய்திட நேரம் கிடைப்பதில்லையே தவிர கூட்டங்கள் நடத்திடும் ஆர்வமும்—கழகக் கட்டளைகளை நிறைவேற்றிடும் கடமையுணர்ச்சியும் எல்லாக் கிளைக்கழக நண்பர்களிடமும் பொங்கிவழிந்திடக் காண்கிறோம். பேசுவதற்குப் பேச்சாளர்களை அவர்கள் அழைத்திட வந்திடும் போது, உங்களுருக்கு 'நம்நாடு' இதழ் எத்தனை வருகிறது என்று கேட்டால் அவர்கள் அதற்கு சொல்லிடும் பதில் சிறிது ஆயாசமூட்டக் கூடியதாகத்தான் இருக்கிறது. மாதம் ஒருமுறை மக்களிடம் பேசுவதற்கு பேச்சாளர்களை அழைக்கும் கிளைக்கழக நண்பர்கள்—தினந்தோறும் மக்களிடம் பேசிடும் சாதனமாம்-கழகத்தின் கேடயமாம்—நாட்டின் முரசொலியாம்—நம்நாடு இதழை ஆதரிப்பது-அதன் வளர்ச்சியைப் பெருக்குவது—மக்கள் மன்றத்திலே அதை அணையாத தீச்சுடராக்குவது—என்ற உறுதியுடன் காரியமாற்றிடக் கிளம்பிட வேண்டும். தம்பிமார்களின் தனியரசுக் கிளர்ச்சியிலே—தாயகத்தின் விடுதலைப் போராட்டத்திலே போர்வாள் ஏந்திப் புறப்பட்டிருக்கும் திராவிடன், பகுத்தறிவுக் கொள்கையோடு தடை பல கடக்க வேண்டியவன். அவனது லட்சிய முழக்கமான திராவிடநாடு இன்னும் எத்தனையோ தியாகத் தழும்புகளைப் பெற்ற பிறகே கிடைக்கக்கூடியதாக இருக்கலாம்.

அத்தகைய மாபெரும் விடுதலைப் போராட்டத்திற்கு அவன் தன்னைத் தயார் படுத்திக்கொள்ளவேண்டும். அவனது பாசறையாம் திராவிட முன்னேற்றக் கழகம் அந்தச்சக்தி வாய்ந்த ஜீவஅமைப்பைப் பெற்றிடல் வேண்டும். அந்த நல்லமைப்புக்கு உறுதுணையாக இருந்திடக் கூடியவைகளிலே மிக முக்கியமானது நமது நாள் ஏடு—நம் நாடு!

ஆயிரம் கழகங்கள் உண்டு—அங்கெல்லாமிருந்து நம் நாடு அலுவலகத்திற்கு உடனடியாக ஆண்டு சந்தாக்கள் வந்து குவிய வேண்டும். ஆயிரமாயிரம் செயல் வீரர்கள் உண்டு—அவர்களின் கைகளிலே தினத்தோறும் 'நம்நாடு' இதழ் மின்னிடவேண்டும். அது அவர்கள் சொந்தமாகவே வாங்கியிருக்க வேண்டும். நாலுபேர் ஆளுக்குக் காலணா போட்டு ஒரு பத்திரிகை வாங்கிப் படிக்கும் கூட்டுறவு முறை, சிக்கனத்தைப் பொருத்தவரை சரிதான் என்றாலும், இயக்க விளக்காம் நம் நாட்டின் சிறப்பை வளர்த்திட நிச்சயம் உதவிடாது என்பதை மறந்தும் மறவாதீர்!

லட்சோப லட்சம் — அனுதாபிகளும், உறுப்பினர்களுமாக இருக்கிறார்கள். அவர்கள் 'நம்நாடு' சந்தாதாரர்களாகிட வேண்டும். காலையில் முதலில் காண்பது கதிரவன் — அதற்கு முதலில் காண்பது கழகத்தின் தினத்தாள் 'நம்நாடு' என்ற வைராக்கியம் பெற்றிட வேண்டும். அப்போதுதான் நாள் தோறும் உங்களை 'அதிகாலையில் எழுப்பிடும் சேவலாக 'நம்நாடு' அமைந்திட முடியும். நம்நாடு நாம், அடைந்திட முடியும்.

சின்னாட்கள், கழகக்காரியங்களை முன்னிட்டும் — ஓய்வில்லா உழைப்பால் ஆட்கொள்ளப் பட்டும், நம்நாட்டில் தொடர்ந்து எழுத முடியாத நிலையிருந்த நமது அண்ணா அவர்களும், இப்போது சிறிதளவு ஓய்வு பெற்று தினந்தோறும் அரியகருத்துக்களை 'நம்நாடு' மூலமாக நாட்டுக்குத்தந்திட முன் வந்துள்ளார்கள். அவரது எழுச்சியும் ஏற்றமும் பெற்ற எழுத்துக் குவியல்கள் இனி 'நம்நாடு' இதழில் தொடர்ந்து, இடையே தொய்வு ஏற்படாமல் — வெளிவரும் என்பதை மகிழ்ச்சிப் பெருக்கோடு தெரிவித்துக் கொள்கிறோம்.

வரும் ஜூன் மாதத்திலிருந்து அளவிலும் பெரியதாக 'நம்நாடு' வருவதற்கான ஏற்பாடுகள் முடிவடையும் கட்டத்திலிருக்கின்றன.

இந்தப் புது முயற்சிகள் வெற்றி பெறவும் திராவிடம் விரைவிலே வெற்றிக் கொடி ஏந்திடவும் தேவையான ஆதரவை கழகத் தோழர்களும், பொதுமக்களும், குறிப்பாக விற்பனையாளர்களும் கடமை, கண்யம், கட்டுப்பாடு ஆகிய மூன்று உணர்ச்சிகளும் ஊறு வந்திடாத வகையில் அளித்திட வேண்டுமென்று மிகவும் பணிவுடனும், பாசமுடனும், நேசமுடனும் கேட்டுக் கொள்கிறோம்.

வாழ்க நம்நாடு! வருக நம்நாடு!!

# தொடர் கதை

## கருணை

காதல் ஓவியம்

சென்ற இதழின் தொடர்ச்சி

3



சந்தனத்தின் பிடியிலே சிக்கிய செல்வம், துடித்துப் போய்விட்டான். தந்தையின் அன்பான அணைப்பைப் பெறலாம் என்றிருந்த அவன், அழுத்தமான இரும்புப் பிடியிலே அகப்பட்டுத்திணறினான். அவன் கண்கள் நீர் நிலைகளாயின. அப்பா! அப்பா! என்று அலறியபடியே சந்தனத்தின் முரட்டுத் தாக்குதலுக்கு ஆட்பட்டான். மரங்கள் சூழ்ந்த ஒரு இருட்டு மண்டபம். நிலவின் ஒளியையும் உள்ளே விடாமல் தடுக்கும் நெடிய தருக்களின் ஓரத்திலே ஒரு குட்டிச்சுவர். அந்த சுவற்றின் மீது செல்வத்தை வீசியெறிந்தான் சந்தனம். குத்துவிளக்கைக் குடும்பத்துப் பெண்கள் அன்பும், பக்தியும் வழிந்திட எடுத்து நடப்பார்கள். ஆனால் ஏற்றிய விளக்கை கூடத்தில் வைத்திட எடுத்துச் செல்லும் போது, கை தவறி, எண்ணெயும் எரியும் திரியும் கையிலேவிழுந்துவிட்டால், நல்லவிளக்கென்றும் பாராமல் திடீரெனப் போட்டு விடுவார்கள். அதேபோலத்தான் சந்தனம், தன் அருமைச் செல்வன் செய்த தவறின் காரணமாக அவன் மீது வைத்திருந்த அன்பையெல்லாம் மறந்துவிட்டு குட்டிச்சுவற்றின் மீது குமார செல்வத்தை வீசியெறிந்தான்—குடும்பத்துப்பெண்ணாள், குத்து விளக்கை எறிந்ததைப் போல! சுவற்றின் கீழ்த்தளத்திலே குப்புற வீழ்ந்த செல்வம், குமுறும் நெஞ்சுடனே எழுந்து நின்றான். அவனும் தந்தையை ஒருகணம் மறந்தான். கோபக் கனல் அவன் விழிகளைப் பொத்துக் கொண்டு புறப்பட்டது. மாக்கிளை—இலை — தழைகளின் இடுக்கின் வழியாக, எட்டிப் பார்த்து வெள்ளிச் சிரிப்பு காட்டும் நிலவொளி, செல்வத்தின் முகத்தை சந்தனத்திற்கு எடுத்துக் காட்டியது. சந்தனமோ, உடலெல்லாம் நடுங்கிட, முகமெல்லாம் பயங்கரக் கீறல்கள் எழுத்திட உறுமினான் மகனைப்பார்த்து!

'கல்வி கற்கும் அழகு நன்றாயிருக்கிறதடா! காதல் நாடகம் நடத்தவா இங்குவந்தாய்! அறிவு மணம் பெற வந்தவனுக்கும் அர்த்தராத்திரிப் படிப்பு. விவேக சிந்தாமணியை அழைக்க வந்தவனுக்கு விரகதாப சிந்தாமணியின் அணைப்பு. அறிவு பெறுவாய் என்று உன்னைக் கல்விச்சாலைக்கு அனுப்பினால் நீ காமவேள் நடன சாலைக்கு கால்கடுக்க ஓடுகிறாய்! இவ்வளவு கஷ்டப்பட்டு காதல் காவியமா படிக்க வந்தாய் முட்டாளே!''

தந்தை பேசும் வரையில் மௌனமாக நின்று கொண்டிருந்தாலும்கூட, ஏதாவது பதிலுக்கு சொல்லிவிட வேண்டுமென்றுதோன்றிற்று அவனுக்கு. அப்படி சொல்லக் கூடாதென்றும் எண்ணினான். அவனையும் மீறி சில வார்த்தைகள் குதித்துவிட்டன. பிறகென்ன; அணையிலே சிறு வெடிப்பு கண்டாலும் பெரு வெள்ளம்தானே!

'காதலுக்கும் படிப்புக்கும் சம்பந்தமில்லை.'

'அதனால் தான் கேட்கிறேன்; அறிவுகெட்டத்தனமாய் ஏன் நடந்தாய் என்று! உனக்கென்னடா தெரியும் காதலைப்பற்றி!'

'தெரியும்-வாலிப உள்ளத்தின் வசீகர ஓவியம் காதல்! வாடிப்போன வயோதிக இருதயங்களுக்கு அதன் பெருமை தெரியாது!'

சந்தனத்திற்கு ஆத்திரமான சிரிப்பு வந்துவிட்டது. காதலைப் பற்றிய உண்மையை, தன்மகனே தனக்குச் சொல்லும்போது ஒரு தந்தைக்கு சிரிப்பு வரத்தானே செய்யும். அதுவும் அந்த நிலைமையில் எரிச்சல் கலந்த சிரிப்பு வருவதில் என்ன வியப்பு. சந்தனம் சிறிதுநேரம்அப்படியே நின்றான். அந்த அரைக்கணத்திலே அவன் இருதயத்திலே ஒரு பெரும் போராட்டம் நடைபெற்றுத்தான் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் அவன் கொஞ்சம் இறங்கிவந்து பேசியிருக்கத் தேவையில்லை. அது என்ன போராட்டமாக இருக்கும்;

'அய்யோ பாபம்—இளைஞனுக்கு என்ன தெரியும் காதலைப் பற்றி. இளமை, பாம்பையும் தூக்கி விளையாடும் பருவமாயிற்றே; பெரிய பெரிய மனிதர்களே மனிதர்களென்ன; மகான்களே அந்த மயக்கத்தால் அழிந்தனர் என்று கதைகள் உண்டு-இவன் என்ன கண்டான் அந்தக் காதலெனும் கயமைத் தன்மையைப் பற்றி! என்று அவன் தன் இருதயத்தோடு பேசிக் கொண்டிருந்திருக்க வேண்டும். அந்தப் பேச்சு முடிந்ததும் மகனிடம் பேசத் துவங்கினான்.

'செல்வம்! வர்ணிக்கத் தெரியுமடா எனக்கும்-கேள் இதை-கல்விச்சாலை ஒரு கடல்...அதிலே மூழ்கி முத்தெடுக்க வேண்டுமே தவிர, காதற்கிளிஞ்சல்களைப் பொறுக்கக் கூடாது. பள்ளிக்கூடம் ஒரு தங்கச் சுரங்கம்—அதில் பொன்னைத்தான் எடுக்க வேண்டும். காதலென்னும் கனகாம்பரப் பூவைத் தேடி அலையக் கூடாது. சரித்திரங்களைப் படிப்பாய்—சமுதாயம் வளர்ந்த விதங்களைத் தெரிந்து கொள்வாய்—என்று உன்னைசர்வகலாசாலைக்கு அனுப்பினால் நீ, சரசம்-சல்லாபம்...இவைகளிலே ஈடுபட்டு சரிந்து போகிறாய்!'

"சரித்திரத்திலேதான் படித்தேன்; ஷாஜகானுக்கும் மும்தாஜுக்கும் ஏற்பட்ட காதலை! ஆங்கில இலக்கியத்திலேதான் படித்தேன், ஜூலியட்டும், ரோமியோவும் ஜோதிமயமான காதல் நட்சத்திரங்கள் என்று!''

"அதைப்படித்தாய் — ஆனால் கிளியோ பாட்ராவின் கிளி மூக்கிற்கு அடிமையான சீசர், ஆண்டனி இவர்கள் சீரழிந்த விதத்தை நீ படித்திருக்க மாட்டாய்! காதலாம் காதல்—பித்துப் பிடித்த சில எழுத்தாளக் கழுகுகள் பிராண்டிவைத்த காட்டுமிராண்டிக் கற்பனை. காமத்துக்குப் போடுகின்றதிரை. எதன் பெயரடா காதல்! இளிச்சவாயனே! தசைப் பொம்மைகளின் மேல் ஏற்படுகின்ற தணியாத வேட்கைக்குப் பெயர் காதல்! வெளி அழகைக் கண்டு கண்களின் ஒளி இழந்தவர்கள் ஊறி வைத்த உருப்படாத சொல் அலங்காரத்துக்குப் பெயர் காதல்! சூதுக்குப் பெயர் காதல்! சூன்யத்துக்குப் பெயர் காதல்! சுகங் காணுகிற இடத்துக்குத் தாவுகிற உணர்ச்சிக்குப் பெயர் காதல்! நானும் பார்த்திருக்கிறேன் காதலை! நானும் பார்த்திருக்கிறேனடா — "காதல் காதல்!'' என்று பேசி, கடைசியில் என்னைக் காணவும் சம்மதிக்காத ஒரு காதகியை!''

"சூடானபாலைசுவைத்த பூனை-ஆறிப்போன பாலைப் பார்த்ததும் அஞ்சி நடுங்குகிறது!''

"சீ! என்ன சொன்னாய் — அந்த மூதேவியின் மோகம் தலைக்கேறி விட்டதா?''

"என் மூச்சோடு கலந்தவளை மூதேவி என்று சொல்லாதீர்கள், என் விழியிலே புகுந்து விட்டவளை விரட்ட முடியாது என்னால்!''

"அடேய்! முள்ளம் பன்றிகளைவிட மோசமானவர்களடா பெண்கள்! உள்ளத்தைக் காதலிக்கத் தெரியாத கள்ளத்தனம் வாய்ந்தவர்களடா! அவர்களுக்குத் தேவையானது, கருத்துக்கு விருந்தல்ல — கண்ணுக்கு ரம்மியம் — அன்பல்ல, அவர்கள் விரும்புவது! அழகு! அழகு! அழகு இருக்கும் வரையில் அடிமையாயிருப்பார்கள். அழகு தேய்ந்து விட்டால் வேறிடத்துக்குப் பாய்ந்து விடுவார்கள்!!

"உங்கள் அனுபவத்தை மட்டும் வைத்துக் கொண்டு காதலுக்கு அகராதி தயாரிக்கிறீர்கள்—''

"ஆ!''

சந்தனத்தின் தொனி, யானை பிளிறுவதுபோல் இருந்தது. தன்னுடைய அனுபவத்தை தன் மகனே இழித்துரைக்கிறானே — என்று கொதித்தான். அந்த வேகத்தில் செல்வத்தின் இரண்டு தோள் பட்டைகளையும் பயங்கரமாக உலுக்கியபடியே "என்னடா சொன்னாய்?'' என்று கத்தினான். இனி எதற்கும் துணியவேண்டியது தான் என்ற நிலைமைக்கு ஆளான செல்வம்; காதல் மீது அவன் வைத்திருந்த மதிப்புக்கும், சிந்தை கவர்ந்த சிங்காரியாம் சித்ராவின் மீது கொண்டிருந்த அளவிட முடியாத ஆசைக்கும், தந்தை கற்பிக்கும் களங்கத்தை சகித்துக் கொள்ள முடியாமல் எதிரே நிற்பது தந்தையென்றும் பாராமல் ஒருவார்த்தை கூறிவிட்டான். சந்தனமே, தன் மகனிடம் எதிர்பார்க்காத வார்த்தை அது!—'என்னடா சொன்னாய்' என்று அதட்டி உலுக்கியது தான் தாமதம்; உடனே செல்வம் — "சும்மா நிறுத்தும்; உமது அவலக்ஷணத்தை யாரும் காதலிக்கவில்லை என்பதற்காக எங்கள் மீது சீறுகிறீர்?''—சொல்லி முடித்தான் செல்வம். அவன் தோள் மீது இருந்தசந்தனத்தின் கைகள் திடீரென எடுக்கப் பட்டன. "அய்யோ!''என்று தன் தலையில் பலமாக பல முறை அறைந்து கொண்டான் சந்தனம். அவனால் நிற்க முடியவில்லை. மயக்கம் வந்து விட்டது போலிருந்தது. அழவேண்டும் — நன்றாக அழ வேண்டும் — என்ற உணர்ச்சி அவன் நெஞ்சத்தை கனமாக்கியது. ஆம்; அழுதே விட்டான் — ஏழெட்டு வருடங்கள் சிறைச்சாலையிலே காலத்தைப் போக்கி, தன் அன்பு மகனைக் காணவந்த அவன் —இவ்வளவு பெரிய திக்குண்டத்திலே தன்னைத் தள்ளி விடுவான் என்றே எதிர்பார்க்கவில்லை. 'ஓ—வென அழுது விட்டான். கால்கள் பூமியிலே பதியவில்லை. குடிகாரனைப் போல தள்ளாடினான். போதையில் உளருகிற விதத்திலே ஏதோதோ பேசினான் —

"அவலட்சணம்! நீயும் கூறிவிட்டாயா? நீ தானடா பாக்கி... உன்னைக் கஷ்டப் பட்டு வளர்த்ததற்கு, கடைசியாக நீ தந்த காணிக்கை, அவலட்சணம் என்ற பட்டம். இந்தப் பட்டம் பெறத்தானா, உன்னைத்தோளிலும், மடியிலும், தொட்டிலிலும் போட்டுத் தொல்லைகள் அனுபவித்து வளர்த்தேன். அழகே உருவெடுத்தவனே! அதனால் அகம்பாவம் கொண்டிருப்பவனே! கள்ளக் காதலியை அடிமையாக்கி வைத்திருக்கும், உன்கட்டுக்குலையாத அழகு, இந்த அவலட்சணத்தால் தானடா வளர்க்கப்பட்டது!

அவலட்சணம் — அகோரம் — விகாரம் — அலங்கோலம்! அறிவு கெட்ட சிறுவனே! அவலட்சணத்துக்கும் அறிவுக்குந்தானடா உலகத்தில் நிரந்தரப் போட்டி! அதிலே அழகு ஜெயித்ததில்லை—ஜெயிக்க முடியாது!

இன்று அழகு, நாளை விகாரம் இளந்தளிர், பழுப்பாகும். இளமை, கிழமாகும். அழகு, அலங்கோலமாகும். என் முகத்தைத் திராவகமும், தீயவனும் தீய்த்து விட்டார்கள். இளமை தவழும் முகங்கள் கால சேகைகளால் கறைபட்டுப் போகுமென்பதை மறந்துவிடாதே! கொய்யா இதழ்-கொம்புத்தேன் கொட்டும் கன்னம்—குழிவிழுந்து போகும்! கோமளத் தாமரைகள், குளிர்ச்சி தரும் கண்கள் — குருடாகி விடும்!

வாலிப வனப்பு, வயோதிகப் படையெடுப்பின் முன்னே, சரணடையத்தான் வேண்டும். அப்போது பார்; அழகு ஜெயிக்கிறதா-அலங்கோலம் ஜெயிக்கிறதா என்று!

அலங்கோலம், அவலட்சணம், எவ்வளவு கருணையற்ற உள்ளமடா உனக்கு! ரத்தம் கசியும் இருதயமடா இது! இதிலே நீ வேறு ஈட்டியைப் பாய்ச்சி விட்டாய். நீ என்ன செய்வாய்; என்னை அவலட்சணமென்று நினைத்து அலறி ஓடிவிட்ட அற்ப புத்திக்காரியின் அருந்தவப் புதல்வன் தானே நீ! மனைவி புதல்வன்—அவர்களாலேயே சகித்துக் கொள்ள முடியவில்லை என் அழகை. அழகு விரும்பிகள் கலாரசிகர்கள்;அவர்களிடத்திலே இந்த அவலட்சணத்திற்கு வேலையில்லை! வேலையில்லை! வேலையில்லை!.

இப்படி ஓங்கி அலறியவாறு இருண்ட மண்டபத்தின் உடைந்த தூணிலே தலையை 'படீர்! படீர்!' என்று மோதிக் கொண்டான் சந்தனம்.

செயலற்றுப் போன செல்வம், அவனருகே ஓடிப்போய்-'அப்பா! அப்பா!' என்று கதறினான்—காலில் விழுந்தான்.

"அப்பனும்—மகனும்! அவலக்ஷணத்திற்கு ஏதடா மகன்!'' என்று அவனைப்பிடித்துத்தள்ளி விட்டு ஓட ஆரம்பித்தான் சந்தனம். "அய்யோ, அப்பா என்னை மன்னித்துவிடுங்கள்'' என்று பின்னே ஓடினான் செல்வம்.

ஓடிய சந்தனம், பயங்கரமாகத் திரும்பி—"நான் யார் உன்னை மன்னிக்க—இனி இந்த உலகில் எனக்கு யார் இருக்கிறார்கள்— பாவி மகனே! இன்னும் சிறிது நேரத்தில் மூச்சற்று சாயப் போகும் என் பிணத்தையும் உன் அழுக்குக் கரங்களால் தொடாதே!' என்று சொல்லி விட்டு, சந்தனம்—அந்த மரமடர்ந்த சோலையைத் தாண்டி-குவிந்து கிடக்கும் மலைப்பாறைகளின் பக்கம் ஓடினான்.

'சித்ராவை மறந்து விடுகிறேன் அப்பா!' என்று செல்வம் பின் தொடர்ந்தபடி கதறியது சந்தனத்தின் காதில் விழவில்லை. இருவரும், நிலவு பொழியும் அந்த இரவில் ஓடிக்கொண்டேயிருந்தார்கள்.

(தொடரும்)

## முரசொலி

ஆண்டு சந்தா ரூ. 6–0–0
ஆறு மாத சந்தா ரூ. 3–8–0

ஆறு மாதத்திற்கு குறைந்த சந்தா ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.



# மதுவிலக்கு மாத்திரை....

(1-ம் பக்க தொடர்ச்சி)

மாக மாற்றி அமைத்துக் கொண்டார்கள்; இந்த கள்ளச் சாராயம் காய்ச்சிகள்! மதுவிலக்கை மீறுபவர்கள் வருவார்கள்; பின்னர் விடுதலையாவார்கள். இருந்தபோதும், எந்த நேரத்தில் கணக்கெடுத்தாலும் இந்த குற்றவாளிகளின் தொகை மொத்தக் கைதிகளில் கால் பங்கை மீறுவதாகவே இருந்து வருகிறது!

இப்படி நாளொரு மேனியும் பொழுதொருவண்ணமுமாகமதுவிலக்குக் கப்பலில் ஓட்டைகள் விழுந்தவண்ணம் இருக்கின்றன. வேலையில்லாத் திண்டாட்டத்தால் வாடியிருக்கும் மக்கள் சர்வ சாதாரணமாக மதுவிலக்கை மீறுகிறார்கள். பனைமரங்கள் அதிகமாக உள்ள இடங்களில் கள்ளிறக்குவதைத் தடை செய்வது கஷ்டமாம்!

மேலைநாடுகளிலே மது உற்பத்தி செய்ய பல்லாயிரம் ஏக்கராக்களுக்கு திராட்சைத் தோட்டங்கள் வேண்டும்—பழக்குலையிலிருந்து ரசம் இறக்க பிரமாண்டமான ஆலைகள் தேவை; இங்கோ கள்ளிறக்குவது ஒரு சிறிய விஷயம். கொஞ்சம் மரம் ஏறும் திறன்—ஒரு சிறிய அறிவாள்—ஒரு சிறு பானை இவை போதும்; பின்னர் குடம் குடமாக மதுவை ஏற்றுமதி செய்யலாம்! இந்த நிலையிலே நாட்டை ஆட்டிப் படைக்கும் பொருளாதாரமந்தம் வேலையற்றவர்களை வேலை-தேடி அலைபவர்களை புற்றிலிருந்து வெளிக்கிளம்பும் சிற்றெரும்பைப்போல சாரை சாரையாக சாலையோரங்களில் அலைய விடுகிறது!

கள்ளச்சாராயம் சோறுபோடுகிறது—தகுந்த லாபம் கிடைக்கிறது; வயிறு காய்ந்த மக்களின் நாக்கிலே எச்சல்ஊறவைக்கிறது கள்ளச்சாரயத்தொழில் காட்டும் ஆதாயம்! எனவே நேர்மைத் திறனுக்கு மதிப்பளிப்பவர்கள் கூட சட்டவரம்பு மீறிய இந்த தொழிலிலே இறங்கி விடுகிறார்கள் குடிப்பவர்கள் இருக்கும் வரை உற்பத்தியாளர்கள் எவ்வாறு குறைவார்கள்? எங்கு மதுவிலக்கை எடுத்துவிட்டால் தொழில் போய்விடுமோ என்ற பயம் ஏற்படும் அளவுக்கு அவர்கள் தங்கள் தொழில்களிலே தேர்ச்சி பெற்றுவிட்டனர். இப்படி பெருகிவரும் குடிகாரர்களைக் குறைக்க கோத்தகிரியைச் சேர்ந்த டாக்டர் ஒருவர் ஒரு மாத்திரை ஒன்றை சிபார்சு செய்திருக்கிறார். அந்த மாத்திரையைச் சாப்பிட்டால் எப்பேர்ப்பட்ட குடிகாரர்களாய் இருந்தாலும் பின்னர் அவர்கள் சாராயத்தின் பக்கத்திலேயே போக மாட்டார்களாம்.

இதைத் தவிர 'போர்ட் ஆப் ரெவன்யூ' ஒரு யோசனை சொல்லியிருக்கிறது. சட்டத்தைக் கடுமையாக்குங்கள். தண்டனையைப் பெருக்குங்கள். அப்போதுதான்: மதுவிலக்கு வெற்றியாகும் என்கிறது அது!

சட்டத்தின் கோரப் பற்களுக்குச் சாணை பிடிக்கச் சொல்லும் போர்ட் ஆப் ரெவன்யூ—டென்மார்க்கிலிருந்து "மதுவிலக்கு மாத்திரை''யை இறக்குமதிசெய்யச் சொல்லும் கோத்தகிரி டாக்டர்—இந்த இரண்டு சிபார்சுகளில்தான் மதுவிலக்கின்வெற்றி ஊசலாடிக்கொண்டிருக்கிறது!

பல நாள் கஷ்டப்பட்டு தயார் செய்யும் பன வெல்லத்தைவிட ஒரே நாளில் தயார் செய்யப்படும் பனங் கள் அதிக லாபம் தருகிறது! எனவேமுற்போக்குக் கட்சியினர் ஒரு முகமாக அபிப்பிராயம் சொல்லுகின்றனர்: வேலை தேடித் திரிவோர் அனைவருக்கும் வேலைவாங்கிக்கொடுங்கள்; நாடெங்கும் பொருளாதார வளம் கொழிக்கச் செய்யுங்கள்; பின்னர் மதுவிலக்கை அமுல் நடத்துங்கள்! இல்லையேல் கூசாமல் மதுவிலக்கை 'வாபஸ்' வாங்குங்கள், என்று! இந்த ஏழைகோபித்த குரல் கதையிலே பெரியவர்கள் சொல்லும் விவாகரத்து யோசனையைப் போல!

"மீண்டும் வாலிபன் வேசி வீட்டிற்குப் போவானே''என்று பயப்படும், பல இதயங்கள்! அவர்களுக்குச் சொல்ல விரும்புகிறோம் மதுவிக்கை எடுத்து விட்டு மதுவகைகளின் மீது போடும் வரியை ஒரேயடியாக உயர்த்துங்கள்—விலை ஏற்றத்தினாலாவது பலர்குடிக்காமல் இருக்கலாம்! அப்போதும் பலர் முன்வருவர், மாடுமனையைவிற்று போதை பருகும் புண்யவான்கள்! நிச்சயம் அவர்கள் தொகை இப்போது லைசென்ஸ் வாங்கி குடிக்கும் பெருந்தனக்காரர்கள் அளவுக்கு குறைந்து விடும் என எதிர்பார்க்கவும் இடமிருக்கிறது..

எப்படியோ மதுவிலக்குமற்ற நாட்டவர்கள் காரி உமிழும் அளவுக்கு தோற்றுவிட்டது...குற்றங்கள் பெருகிக்கொண்டே போகின்றன...மூன்றே ஆண்டுகளில் 49 ஆயிரம் 'குற்றங்கள் அதிகரித்திருக்கின்றன ...கோத்தகிரி டாக்டர் உபதேசிக்கும் டென் மார்க் மாத்திரையைவிட குற்றங்களைக் குறைக்க இரு சக்திவாய்ந்த மருந்துகள் இருக்கின்றன.

ஒன்று வேலையின்றி அவதிப்படும் எண்ணற்ற ஏழை மக்களுக்கு உடனடியாக வேலை வாங்கிக் கொடுத்து—அரைவயிறு பட்டினியால் பரதவிக்கும் குடியானவர்களின் வருமானத்தை உயர்த்தச் செய்யும் 'பொருளாதார' மாத்திரை.

மற்றொன்று 1948-அக்டோபர் 2-ல் அமுலாக்கப்பட்ட மதுவிலக்கு சோதனையை வெற்றிகரமாக வாபஸ் வாங்கச் செய்யும் 'நிர்வாக' மாத்திரை!

# கலைத்தோட்டம்

## சிறுகதை வேந்தன் - மாபசான்

"என்னுடைய முதல்கதை அய்யா இது. எண்ணற்ற இரவுகள் கண்விழித்து எழுதப்பட்ட கற்பனை. வெள்ளிப் பணங்களை நான் எதிர் பார்க்கவில்லை. வெளியிட்டால் போதுமானது. படித்துப் பார்த்து முடிவு சொல்லுங்கள். துடிக்கும் ஆர்வத்தின் குரல்வளையை நெறித்து விடாதீர்கள்"

"நயமாகச் சொன்னால் நீங்கள் போகமாட்டீர்கள். பயங்காட்ட வேண்டுமோ?" இப்படி ஒரு காலம் — பத்திரிகை ஆசிரியரால் கடிந்து பேசப்பட்டு, கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளப்பட்ட காலம் — ஒன்று இருக்கத்தான் செய்தது அந்த சிந்தனை செல்வனுக்கு-சிறுகதை வேந்தனுக்கு! மாபசான்!-இந்தத் திருநாமத்தை நினைக்கும் போது, பாட்டாளிப் பெரும் படையினரின் கண் ஊற்றின் உப்புநீரும், உடல் கக்கும் கழிநீரும், காதலர்களின் உமிழ் நீரும் கலந்து பூசப்பட்ட அமர ஓவியங்கள்-அமுத காவியங்கள்-நம் நெஞ்சில் நிழலாடத்தவறாது.

மாபசான் பிறக்கும் போதே எழுத்தாளனாகப் பிறந்திடவில்லை. அவனைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருந்த வாழ்ந்து கெட்ட வரலாறுகளும், சூழ் நிலையும் அவனை அத்துறைக்கு இழுத்து வந்துசேர்த்துவிட்டன.

மாபசானின் பாட்டன் ஒருபுகழ் பெற்ற பிரஞ்சு நாவலாசிரியர். பாட்டன் விட்டுப்போன திருப்பணியைத்தான் பேரன் தொடங்கினான்-விட்ட இடத்திலிருந்து! தன்னுடைய 30-வது வயதிலே தான் மாபசான் அவர் எழுதிய நூலை அச்சேற்றிப் பார்க்க முடிந்தது.

அந்த நேரம்தான் அவனது இலக்கியப் புகழின் உச்சிநேரம். படிக்கட்டுகளில் ஏறுதே என்று சீறி விழுந்த பத்திரிகை ஆசிரியர்கள் எல்லாம் மாபசானை வளைத்துக் கொண்டார்கள். பாராட்டுக் கடிதங்கள் குவிந்தன. பார்க்க வரும் இளம் பெண்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகமாயிற்று.

கப்பல்துறைமுகத்தில் குமாஸ்தாவாக இருந்து இயந்திரமென பணியாற்றினனே அப்போது கூட அவனுக்குக் கஷ்டம்தெரியவில்லை — பிரஞ்சுப் படையின் அணி வகுப்பிலிருந்து துப்பாக்கியைத் தாங்க முடியாமல் துன்புற்றனவே மாபசானின் மணிக்கட்டுகள், அப்போதுகூட அவன் கலங்கவில்லை — சாதாரண எழுதுகோலை — கட்டைப் பேனாவை ஏந்தி, எழுதி, எழுதி, குவிக்கும் இலகுவான காரியத்தில் எளிதில் வெற்றிபெற முடியவில்லையே என்று எண்ணி கண்ணீர் வடித்தான்— கடுந்துயருற்றான். 'இச்' ஒலிகளுக்கும், இன்ப மொழிகளுக்கும் முதலிடம் தந்து, ஆடம்பரத்தின் அரவணைப்பில் சிக்கித்தவித்துக் கொண்டிருந்த வண்ண மாடங்கள் சூழ் சொர்ணபுரியாம் பிரான்ஸ் நாடு ஏழைகளின் இலக்கியத்திற்கா மதிப்புத் தந்திருக்கப் போகிறது!

எழுத்தாளன் எழுதுகின்ற ஓவியங்கள் எத்தன்மையதாக இருந்தாலும், அதை உருவாக்க, அவன் விழித்த இரவுகள் எத்தனை, கிழித்துக் குவித்த காகிதப் போர் எவ்வளவு உயரம் — என்பதைக்கூட சிந்தித்துப் பார்க்கப் பக்குவப் படாத நாடு சிறப்பட நாளாகும்-சிறப்பெய்துவது துர்லபம்!

புத்துலகச் சிற்பிகளை துச்சமெனக் கருதிய பிரபுக்கள் கோட்டையான பிரான்ஸ் நாட்டில் இன்னும் அமைதியில்லையே ஏன்?—என் மக்களின் நெஞ்சை கவர முடியாத காரண மென்ன? செத்து மடிந்த எழுத்தாளர்கள் விட்டுப்போன சாபமா?—இல்லை— திறமையைப் போற்றும் நற்பண்பை—உழைப்புக்கு இரங்கும் ஈகைத் தனத்தை பிரான்ஸ் இன்னும் வளர்த்துக் கொள்ளவில்லை.

மாபசான் வாழ்க்கையின் அஸ்தமனம் பயங்கரத்திற்குறியதானதற்குஅவன துசிந்தனை தான் மூலகாரணமென்றாலும்-பிரான்சு நாட்டு மக்களின் மனவளம் பக்குமடையாத காரணமும் அதில் ஒன்று என்றுதான் சொல்ல வேண்டும்.

மாபசான் அவருடைய, குறுகிய வாழ் நாளில் எழுதிக்குவித்த எழிற் சித்திரங்கள் முன்னூறு. அவைகளில் முடிசூட்டி வாழ்த்தக் கூடியவை 'தங்கச் சங்கிலி' 'கயிறு தந்த அமைதி' 'யுனிவீ' போன்றவை.

அவருடைய 42வது வயது! அந்தப் பருவத்தை விருத்தாப்பிய மென்றும் சொல்வதற்கில்லை —வாலிபம் என்றும் சொல்ல முடியாது — ஆனால் சாகவேண்டிய காலமல்ல அது, என்று கூறி விடலாம். ஆமாம், அந்தப் பருவத்தில்தான் மாபசான் மறைந்தார்—நோய்கண்டுஅல்ல, மூளைக் கொதிப்பால் இரத்தம் சூடேறி நிதானமிழந்து பைத்தியக்காரனாக இறந்தார்- பைத்தியக்கார ஆஸ்பத்திரியில்!

## போலிப் புத்தக வியாபாரிகள்; உஷார்!

என்னுடைய பெயரால், நான் எழுதியதாகவும் பேசியதாகவும், பழைய கட்டுரைகள் என்ற பெயரிலும், பிழைப்பு ஒன்றையே குறிக்கோளாகக் கொண்ட போலிப் புத்தக வியாபாரிகள் பலர் புத்தகங்களை வெளியிட்டு மக்களை ஏமாற்றுகிறார்கள். அந்தத் தொத்து நோயைப் பரவ விடாமல் தடுப்பது பொது மக்கள் கடமையாகும். இது போன்ற போலி புத்தகங்கள் பல இயக்கத் தோழர்களின் பெயரால் வெளியிடப்பட்டு, உண்மையான நல்ல கருத்துக்களைக் கொண்ட நூல்களையும் மக்கள் சந்தேகிக்கிற அளவுக்கு நிலைமைமுற்றிப் போயிருக்கிறது. அட்டைப் படத்தையும், தலைப்பையும், எழுதியவரின் பெயரையும் முகப்பில் பார்த்துவிட்டு போலிப் புத்தகங்களை வாங்கி ஏமாறுகிற மக்கள், இயக்க முக்கியஸ்தர்கள் மீது வெறுப்பு கொள்கிற அளவுக்கு இந்தப் போலி வியாபாரிகளின் செயல் பயங்கரமாகப் போய்க்கொண்டிருக்கிறது. இந்தப் போலி வியாபாரிகள் பலரை நேரில் சந்தித்து எச்சரித்தும், நமது 'நம் நாடு' பத்திரிகை, 'திராவிட நாடு' பத்திரிகை ஆகியவைகளில் அறிக்கைகள் விடுத்தும்கூட, அவர்கள் நேர்மையாக நடந்துகொள்ள முற்படவில்லை. பாவம்; அவர்களிடம் எப்படி நேர்மையை எதிர் பார்க்க முடியும்—பிள்ளையார், சரசுவதி, ஸ்ரீமகள், காலண்டர்களைப் போட்டு வியாபாரம் செய்து கொண்டே, கட்சித் தோழர்களையும் ஏமாற்றிப் பிழைக்கக் கங்கணம் கட்டியிருக்கும் அந்தக் கருங்காலிகள் நேர்மை வழி நடப்பதென்பது முடியாத காரியம்தான். இனிப் பொதுமக்கள் தான் அவர்கட்குப் புத்திபுகட்ட வேண்டும். ஆகவே; இனிமேல் என் பெயரால்வரும் புத்தகங்கள்-(மூனாகானா பதிப்பகத்தைத் தவிர வேறு பதிப்பகங்களுக்கு தரப்படவில்லை) ஆனாலும்கூட, வேறு பதிப்பகங்களின் பெயரால் என் புத்தகங்கள் வந்தால் அவைகளின் முன்பக்கத்தில், கீழேயுள்ள கட்டத்தில் இருப்பது போல என் கையெழுத்தாலானஉரிமைக்கடிதம் இணைக்கப்பட்டிருக்கிறதா என்று கவனித்து வாங்கும்படி பொதுமக்களைக் கேட்டுக்கொள்கிறேன். வர்ணஜால அட்டைகளிலோ-மயக்கும் தலைப்புகளிலோ மயங்கிவிடாமல் எனது உரிமையளிப்புக் கடிதம் இருக்கிறதா என முதலில் பாருங்கள். போலி வியாபாரிகளை ஒழித்திட ஒத்துழையுங்கள். உண்மைக்கருத்துக்கள் உலவிட வாய்ப்பளியுங்கள். குறிப்பாக இலங்கை, மலேயா மக்கள் இதை பெரிதும் கவனித்திட வேண்டுகிறேன்.

**புத்தக முன் பக்கத்தில் இருக்கவேண்டிய உரிமைக் கடிதம்**

........ என்ற பதிப்பகத்திற்கு

என் அனுமதி பெற்றுள்ள........

ஒரு புத்தகத்தை.... பதிப்பு

வெளியிட்டுக்கொள்ள உரிமை

அளித்திருக்கிறேன்.

[signature]

**முக்கிய குறிப்பு:**— புள்ளியிட்ட இடங்களில் முறையே, பதிப்பகப் பெயர், பதிப்பு எண், முதலியன என் கையெழுத்தாலேயே குறிப்பிடப்பட்டிருக்க வேண்டும்.

★ ★ ★

# பேசும் பூக்கள்!

★ ★ ★ [உருவகச் சித்திரம்]

பரிமள சுகந்தத்தால் இந்த வையகத்தை முழுக்காட்ட அந்த தோட்டகத்துப் பூக்கள் பூத்திருந்தன... கயல்விழி மாதரின் காந்த முகங்களாக-பேசும் பூக்களைப் பூத்திருந்தன...

அந்த மலர்க்காட்டின் மத்தியிலே-காகங்கள் கரையும் வேம்பின் அடியிலே ஒரு அழகான சூரியகாந்தி அழகுக்கு அழகு சேர்த்தது.

"ஆதவனே! என் அன்புக்கு உரியவனே! நெடுவானம் தொட்டு—காற்றினும் விரைந்துசெல்லும் உன் பரிகளின் கடிவாளம் பிடித்து போகிறாயே...உனக்காக ஒருத்தி காலை முதல் இங்கே ஏங்கி நிற்கிறேன், பார்! கிழக்கு நோக்கி வருகிறாய் என்று உன் கதிர்கள் சொல்லும்; என் மலர் முகத்தை உன் பக்கம் திருப்பி உனக்காக காத்து நிற்பேன்...காம்பு வளைத்து இதோ மேற்கிலும் வந்து விட்டேன்...சாக்கு சொல்லி என்னை விரட்டாதே. எனக்கு வேண்டுவதெல்லாம் நீ கரம் பிடித்தணைத்து, அதரங்களிலே பதியவைக்கும் ஒரு முத்தம்—மலைவாய்க்குப் போகுமுன் என் இதழ் வாய்க்கு ஒரே ஒரு முத்தம்! அதைத் தருவாயா? அன்றி என்னை வாட்டித்தான் போவாயோ?"—இப்படி மோனத்திருக்கும் முனிபுங்கவரைப் போல பகலவனைத்துதிபாடி நின்றாள், அந்த சூரியகாந்தா!

பக்கத்திலே நிற்கும் அந்த வேம்பம்மாள்—காந்தாவின் வேதனைத் தோற்றத்தைப் பார்த்தாள். 'ஆகாயப்பந்தல் போடும் என் கோமாளித் தங்கையே! உன் இதயத்தை கவர்ந்தவன் ஒரு இருதயமற்றவன், கண்ணே! உன் சோககீதம் அவன் செவிக்கு எட்டுமென்று நினைக்கிறாய்! அட, மூடப்பெண்ணே! அதோ மாலைக்கள்ளன் வந்துவிட்டான் உன் உயிரைக் கொள்ளையடிக்க! எட்டாத பழம்-உன் பொருந்தாத காதல்..."—இப்படி எச்சரித்தது அந்த வேம்பின் பூ!

சூரிய காந்தா இதைச் செவி மடுக்கவில்லை..."தினகரா! என் நெஞ்சைக் கவர்ந்த மன்மதா! கொஞ்சம் திரும்பிப்பாரேன்...இந்த ஏழையின் காதல் குரலைக் கேளேன்..."—இப்படிப் பேசிக்கொண்டே இருந்தது சூரிய காந்தி......

"பேதைப் பெண்ணே! தன் நெஞ்சைக் கவர்ந்த நிலவு நங்கையைத்தேடி அலையும் அந்த சூரியனுக்கு உன் அழு குரலைக் கேட்க நேரமேது? இரவு நேரத்தில் வானத்தில் மொய்த்துக் கிடக்கும் தாரகைகளைப் பார்த்திருக்கிறாயா? தாரகைகளா அவைகள்? இல்லை; இல்லை—உன் ஆசைக் சூரிய ஆதவன் பகலெல்லாம் அந்த நிலாப் பெண்ணைத் தேடி அலைந்தபோது பதிந்துவிட்ட பாதச் சுவடுகள்—அந்த ஜொலிக்கும் நட்சத்திரங்கள்!...கால் கடுக்க தன் காதலியைச் சுற்றி வருகிறான்...மாலை நேரத்தில் அந்திவானில் நிலாப் பெண்ணை சந்திக்கிறான்......பாவம்! அந்த 'கால'மென்னும் "வில்லன்" அவர்களைக் கூடாமல் தடை செய்கிறான்...... வெண்ணிலவின் மேல் மோகங்கொண்டு திரியும் அந்த விதியற்றவனா உன்னை மணக்கப் போகிறான்?......அட வேலையற்ற பெண்ணே! — இப்படி கதைகள் பல சொல்லி அவள் காதலைக் கலைக்கப் பார்த்தது அந்த வேம்பூ.

சூரியகாந்தா இவைகளைக் கவனிக்கவில்லை...

மாலை வந்தது. அந்த மலர்க்காட்டின் ஜீவனைப் பறிக்கும் பொல்லாத வேளைவந்தது. "ஓ" வென்று அலறியடித்தது ஒரு பேய்க்காற்று...பொல பொலவென்று உதிர்ந்தன அந்த வேப்பம் பூக்கள்...

தரையிலே பாய்விரித்தபடி அந்த பூவின் தலைவி சொன்னாள் ... "காதல் கீதம் இசைத்தபடி சோம்பேறிப் பொழுது போக்கும் சூரியகாந்தா! இதோ என்னைப்பார்! கருகி விழுந்து விட்டேன் என்று நினைக்கிறாயா? அதோ குடல் கருகி நிற்கும் அந்த ஏழை மனிதர்கள் என்னைப் பொறுக்கி விற்று வயிறு வளர்ப்பர் ... அவர்களுக்கு வாழ்வைக் கொடுத்துத்தான் நான் சாகிறேன். கைகூடாத ஆசையை கானமாக இசைத்துக் காட்டும் பூவின் கூட்டமே! உன்னாலே ஒரு ஜீவன் பிழைப்பதுண்டா? மூட வர்க்கமே! வாடும் உலகுக்கு இன்றைய தேவை — சேவை! சேவை!!" இப்படிச் சொல்லி கண்ணை மூடிக்கொண்டது வேப்பம்பூ...

காத்து நின்ற சிறுவர் கூட்டம் வேம்பின் பூக்களை கையிலே இருந்த கூடையிலே நிரப்பியது!

மீண்டும் ஒரு முறை பேய்க்காற்று அடித்தது. இப்போது காம்பொடிந்து விழுந்தது சூரியகாந்தி..............

"நாளைய பொழுது விடிந்ததும் புது வாழ்வு பெறப் போகும் என் தங்கைகளே! இன்றைய மொட்டுகளே! என் காதலன் வரும் திசையில் காத்திருங்கள்........நிச்சயம் நாளை வந்து விடுவான் முத்தம் ஈந்துவிடுவான்"......இப்படி ஒப்பாரி வைத்து உயிரை விட்டாள்சூரிய காந்தா.

வேப்பம் பூவை நிரப்பி, வயிறு வளர்க்கும் ஏழை சிறுவர்கள் அந்த சூரிய காந்தியை மிதித்துச் சென்றனர்......

— மாறன்

# பேழுவியம்

## மெழுகு பொம்மை!

உச்சி வெய்யிலில் உருகி—மாலைக்குளிரில் இருகிப் போகும் மெழுகு பொம்மையைப் போல, அமெரிக்க ஏகாதிபத்திய நெருப்புக்கோளம் பக்கத்தில் வந்தால் சிங்களத்து கோமகன் கொத்தலவாலை கசிகிறார் — பெருமாள் மாட்டைப் போல எதற்கும் தலையசைக்கிறார்..... பின்னர் ஆசியப் பிரதமர் குழாத்தைக் கண்டவுடன் கெட்டியாகிறார்— 'ஆசியா ஆசியர்களுக்கே' என்று கர்ஜனை புரிகிறார்...இப்படி இலங்கை அரசியலை குழப்பிக் கொண்டிருக்கும் கொத்தலவாலை ஆசியாவின் முன்னேற்றத்திற்கு பெரியதொரு முட்டுக் கட்டை!

இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் விழிப்படைந்து நிற்கும் ஆசியாவை நோக்கி, "ஆசியாவே! நீ விழிக்க வேண்டாம்; இப்போது ஒலிப்பது சாமத்துக் கோழியின் கூவல்! இன்னும் பொழுது விடியவில்லை; தூங்கு கண்ணே! தூங்கு!"—என்று தாலாட்டு பாடி தொட்டிலிலே போட்டு ஆட்ட நினைக்கிறார் அந்தப் புண்ணியவான்!

ஜரிகைச் சேலையும், வைர ஜிமிக்கியும் கேட்கப் போகும் மனைவியின் முகபாவத்தைத் தெரிந்து கொண்ட புத்திசாலிக் கணவன், "அட, மடப் பெண்ணே! குழம்பிலே ஏன் இப்படி உப்பைக் கொட்டினாய்! என்று எரிந்து விழுந்து அவள் கவனத்தை மாற்றுவதைப் போல இப்போது கொத்தலவாலை பொருளாதார மந்தத்தால் அவதியுறும் சிங்களவர் சிந்தனையைத் திருப்ப இந்தியர்கள் பிரச்சினையை சந்தைக்கு இழுத்து வம்பு பேசுகிறார்! இந்தியர்களுக்கு பிரஜா உரிமையை மறுத்து—மலானிசத்துக்கு வாரிசாக மாறி இலங்கை அரசியல் குட்டையை குழப்பிக் கொண்டிருக்கும் நேரத்தில்கொத்தலவாலைதிட்டங்கள் தீட்டியிருந்தால் தென்னிலங்கையை சுபீட்சம் கொழிக்கும் செல்வ பூமியாக மாற்றியிருக்கலாம்! "இந்த இந்தியப் பிரச்னை மட்டும் இல்லாமலிருந்தால் என் கதி என்னவாகியிருக்கும்?"—என்று கேள்வி கேட்டு அதற்கு ஆச்சரியக் குறி பதிலாக வரும்போது ஆயாசப் பெருமூச்சுவிடும் அவர் தம் மனசாட்சியின் குரல் நம்முடைய காதுகளில் விழாமலில்லை.

இந்த அளவில் காஷ்மீர் பிரச்சினையைக் கிளப்பி உட்பூசலை அடக்கப் பார்க்கும் முகமதலியையும் மிஞ்சிவிட்டார், கொத்தலவாலை!

1949 லேயே தென் கிழக்கு பாதுகாப்பு ஏற்பாட்டை வன்மையோடு எதிர்த்த-மறைந்த வீரர் சேனநாயகா கண்ணீர் வடிக்கிறார், முழு நிலவாம் இலங்கை பூமியில் ஏற்படப் போகும் களங்கத்தைப் பார்த்து!

கொத்தலவாலை அமெரிக்கஆதிபத்தியம் பின்னியிருக்கும் சிலந்தி வலையை சித்திர கூடமென்றெண்ணி தாவப்போகும் ஒரு பரிதாபத்திற்குரிய ஈ!

உள்நாட்டு குழப்பங்களை — சொந்த பலஹீனத்தை—அது உண்டு பண்ணிய மூடை நாற்றத்தை "இந்தியர்கள் பிரச்சினை" என்னும் செண்டு பூசி மறைக்கப் பார்க்கும் ஒரு 'நாட்டு ஷோக்காளி!'

எலிசபெத் ராணிக்கு அங்கிங்கெனாதபடி எங்கும் வரவேற்பு வைபவங்கள் நடத்துவார்—ராணியார் போன பின்னர் "இந்தோசீனாவில் போரை நிறுத்துங்கள்" என்று கும்பலில் சேர்ந்து ஏகாதிபத்ய எதிர்ப்புக் கூச்சல் போடுவார்..."வாழ்க!" என்பார் அதைச் சொல்லி வாயை மூடு முன்னர் "ஒழிக!" என்று கூச்சலிடுவார், கூலிக்காக கொடி பிடித்து கோஷமிடும் சிறுவனைப் போல!

கொத்தலவாலை இன்னும் சிரித்துக் கொண்டே இருக்கிறார் .."தாண்டவம் புரிந்தபடியே நிற்கிறார்..." இந்தியாவின் கலாச்சாரத்தைப் பாரீர்... அதற்கு ஈடு இணை ஏது சொல்வீர்" —என்று வாய்ப்பறை அடித்த விஜயலட்சுமியின் அருமை மகளை நடனசாலையில் சந்தித்த ஆணழகனல்லவா அவர்! அந்த சிங்கத்தின் செயலை பாராட்டுகிறோம், பாரத புத்ரர்களின் 'பவிஷை' வெட்ட வெளிச்ச மாக்கியதற்காக!

# கடைசிப்பக்கம்

என். எஸ். சுப்பையா, கொழும்பு.

(?) இலங்கை வந்திருந்த சி. பி. சிற்றரசு, கீழே கிடப்பதும் கல் தான், கோயிலில் இருப்பதும் கல் தான் — ஒரு கல்லைக் கடவுள் என வணங்குவது சரியா? என்று பேசினரே; அப்படியானல் எல்லோரும் பெண்தானே — என்பதற்காக; சகோதரியை திருமணம் செய்து கொள்ள முடியுமா?

அய்யய்யய்யே! என்ன கேள்வி தோழரே இது! சகோதரி தாயின் வயிற்றில் பிறக்கிருள்— மனைவி, மாமியார் வயிற்றில் பிறக்கிருள். எல்லாக் கல்லும் ஒரே பூமியின்வயிற்றில் அல்லவா பிறக்கிறது? இந்த வித்தியாசம் கூடவா தெரிவதில்லை.

வி. ஆர். சாரி, மயிலை

(?) ஆரியர்களை மட்டும் பூர்ஷுவா என்று சொல்வது சரியா?

ஆரிய சமுதாய அமைப்பைத் தான் பூர்ஷுவா அமைப்பு என்று சொல்லுகிறேும். 'இவர்களும் பூர்ஷுவா' என்றுதான் குறிப்பிடுகிறேமே தவிர; 'இவர்கள் மட்டுமே பூர்ஷுவா' என்று கூறுவதில்லை, நண்பரே!

தமிழ்ப்பித்தன், இலங்கை

(!) திராவிடநாடு விந்தியத்தை எல்லையாகக் கொண்டதா; சென்னை மாகாணம் மட்டுமா?

எல்லையைப் பற்றிய பிரச்சினை பிரிவினை நேரத்தில் விவாதிக்கப்பட வேண்டியது. பாகிஸ்தான் என்று ஒரு தனிநாடுதான் முதலில் கேட்கப்பட்டது. பிரிவினையின்போதுதான் எல்லைகள் வகுக்கப்பட்டன. பிரிவினை வரையிலே எல்லை எது என்பது என்ற விஷயத்திலே பலதிறப்பட்ட கருத்துக்கள் உலவலாம். அந்தக் கருத்துக்கும் பிரிவினைக்கும் சம்பந்தமில்லை.

(!) ஆந்திரம் பிரிந்த பிறகு திராவிடம் இருக்கிறதா?

குழந்தை பிறந்த பிறகும் தாயார் இருக்கிருளா; என்று கேட்பது போலிருக்கிறது இது!

அ. சித்ரா, சுலோசனா,
ரெட்டையர்பாடி

(?) கல்லூரிப் படிப்பு பெண்களுக்குக் கூடாது என்று ஒரு பத்திரிகை ஆசிரியர் கூறுகிருரே; இது பற்றி தங்கள் கருத்தென்ன?

ஆஸ்ரமத்து அகல்யாவும், குருபத்தினி தாரையும் கல்லூரிப் படிப்புக்கு போகாமல் பர்ணசாலையில் வாழ்ந்தார்களே; அவர்களின் 'பவிஷு' என்னவாம்? என்று அந்தப் பத்திரிகை ஆசிரியரைக் கேட்கவேண்டியதுதான். பெண்களை நிரந்தர அடிமைகளாக ஆக்கி வைத்திருக்க வேண்டுமென்ற ஆண்மை ஏகாதிபத்ய வாதிகள், அப்படித்தான் ஏதாவது கிறுக்கித் தள்ளுவார்கள்.

முருகதாசன், சென்னை

(?) பலநாளைக்குப் பிறகு இன்றுதான் உற்சாகமாகப் பேசுகிறேன் என்று ராஜாஜி கூட்டத்தில் கலந்து கொண்ட மந்திரி சுப்பிரமணியம் சொன்னரே அது என்ன?

விலை பொருளாக வேறு வீட்டுக்குப் போய்விட்டாலும் வளர்த்தவர்களைக் காணும்போது வாலைக் குழைப்பதுதான் நன்றியுள்ளவர்களுக்கு லட்சணம்.

(?) 'என்னுடையசர்க்கார் ஸ்திரமான சர்க்கார்' என்று சி. ஆர். குறிப்பிட்டது பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?

காமராசர் சர்க்காரை கவிழ்க்கப் போகிறேன் என்ற சாமர்த்தியமான சாணக்கியப் பேச்சுத் தான் அது! ஜாடைமாடையாகக் கூறினாலும், அரசியல் நாணயத்தின் வாடை அதில் ஒரு சிறிதும் வீசவில்லை. ஆச்சாரியார்போன்ற பெரிய மனிதர் பட்டியலிலே உள்ள பிரமுகர்கள் வயிற்றெரிச்சலை இப்படி வெளியிடக்கூடாது தான்; "பாவம்"!

தெய்வநாயகம், திருவல்லிக்கேணி

(?) கல்வித்திட்டத்தை வாபஸ் பெற்றால், சர்க்காரை கவிழ்த்து விடுவோம்; என்று சின்னதுகள் பேசுவதின் அர்த்தமென்ன?

கூலிவாங்கும்நேரத்தில்போட வேண்டிய கூச்சல்அது! சின்னது பெரியதுகளின் பேச்சுக்கு மதிப்பு வேறு இருக்கிறதா? கடைந்தெடுத்த கங்காணிகள்— பக்கா விபீஷணர்கள்!

கரிகாலன், கபாலி, ராயப்பேட்டை

(?) கம்யூனிஸ்டுகள் தி. மு. கழகத்தைப் பற்றி அவதூருகப் பேசியும், பத்திரிகையில் எழுதியும் வருகிருர்களே; அதற்கு ஏன் நீங் மறுப்பு தரக்கூடாது?

அவதூறுகளுக்கு மதிப்பு தருவதில்லை. அதனல் மறுப்பும் தருவதில்லை.

ராசகோபால், மாயவரம்

(?) சென்ற வார 'முரசொலி' கடைசிப் பக்கத்தில்— தி. மு. கழகம் தேர்தலுக்குப் பெரியாரிடம் அனுமதி கேட்பதற்கு காரணம் எழும் போது; "காதலித்த பெண்ணை திருமணம் செய்து கொள்ள தந்தையிடம் அனுமதி கோருவது போல" என்று குறிப்பிட்டிருக்கிறீர்களே; அப்படியானல் தி. மு. கழகம், தேர்தலை காதலிக்கிறது என்று தானே அர்த்தம்? தந்தை அனுமதி தரா விட்டால் காதலைத் தியாகம் செய்து விடுவீர்களா?

தேர்தல், காதலித்த பெண் தான். அவளைக் கைவிடுவதா இல்லையா என்பது அனுமதிப் பிரச்சினை தீர்ந்த பிறகு யோசிக்க வேண்டிய விஷயம்.

(?) திராவிடம் பிரிந்தால் இலங்கை வாழ் திராவிட மக்களின் நிலைமை என்ன?

இலங்கையில் மட்டுமல்ல; வெளிநாடுகளில் அவதிப்படும் திராவிடர்கள் அனைவரும்திரும்ப அழைத்துக் கொள்ளப்படுவார்கள். அவர்கட்கு நல்வாழ்வு அளிக்க திராவிடஅரசு திட்டங்கள் வகுக்கும். வெளிநாடுகளில் சுரண்டும் நிலைமையில் யாராவது ஓரிரு பணக்கார பூதங்கள் திராவிடத்திலிருந்து குடியேறியிருப்பதாக செய்திவந்தாலும், அவர்களும் பலவந்தமாக திரும்ப அழைக்கப்படுவர்.

## பூசி மறைக்கிருர் சாமிநாதன்!

அவருக்குக் காட்டம் இருக்கத்தானே செய்யும்! பங்காளி வீட்டு வாலிபர்கள், சொந்தக்கார இளைஞர்கள், தன் வீட்டுக்கு பக்கத்து மைதானத்திலே பல்லாயிரக் கணக்கான மக்களைக் கூட்டி திராவிட நாடு பிரியவேண்டும் என்று பேசினல் எந்தக் காங்கிரஸ் எம். எல். ஏ.க்குத் தான் கோபம் வராது! அதுவும் 'ஷோக்' பேர்வழி பாகனேரி சாமிநாதன், சொகுசு வாழ்வு நடத்துபவர், பட்டைக் கண்ணாடியோடு பளபளக்கும் மோட்டாரில் பவனி வருபவர், மகளின் மணவிழாவின்போது மந்திரி சபையையே தன் இல்லம் சேர்த்தவர்—அவரா விரும்புவார்! திராவிட நாடு பிரிய வேண்டு மென்பதை!

சென்ற வாரம் சட்டசபையில் இலங்கை இந்தியர் பிரச்சினை பற்றிப் பேசும் போது 'தென்னடு பிரிந்தால் மட்டும் இலங்கை இந்தியரின் வாழ்வு சீர்பட்டு விடாது' என்று பேசியிருக்கிருர். ஒருநாடு சுயேச்சை பெறுவ தென்ருல் அதன் உட்பொருள் என்ன என்பதை இந்நாள்வரை சாமிநாதன் தெரிந்து கொள்ளாததற்கு பரிதாபப் படுகிறேம். தென்னடு பிரிந்தால் ஒப்பந்தங்களுக்கு டில்லிக்குப் போக வேண்டாம் — வேண்டுகோள் விடுக்க வேண்டாம். நாமே தீர்த்துக் கொள்ள முடியும் — ஆர். வி. எஸ். அறியட்டும்.

தென்னடு பிரிந்தால், தென்னட்டார் இலங்கையிலிருந்து ரூ 25 தான் கொண்டு வரலாம் வடநாட்டார் அதற்கு அதிகமாகக் கொண்டு போகலாம் என்ற அநீதி இருக்காது—சாமிநாதர் சிந்திக்கட்டும்.

தென்னடு பிரிந்தால் அங்கே தூதுவராக தேசாயிருக்கமாட்டார் — திராவிடத்தின் கலையறிந்த செந்தமிழ் செம்மல்தானிருப்பார்—பாகனேரியார் புரிந்து கொள்ளட்டும்.



மு. கருணாநிதியால் 'முரசொலி' அச்சகத்தில் அச்சிட பட்டு, வெளியிடப்படுகிறது. அலுவலகம்: 62, எஸ். பி. சன்ன
தெரு, ராயப்பேட்டை, சென்னை-14.

